17

## வடிகால்

அது ஒரு சின்ன கிராமம். விரிவான மாவட்ட வரைபடத்திலும் அதன் பெயர் தென்படுமா என்பது சந்தேகம். அப்படிப்பட்ட ஊருக்கு, ஓர் இரயில் நிலையம் கூட இல்லாத ஊருக்கு, எங்கோ இறங்கிப் பிறகு குதிரை வண்டியில் அமர்ந்து இரண்டு கல் தொலைவு பயணிப்பது சுஷ்மாவுக்கு ஏக உற்சாகமாக இருந்தது. பாதையின் இரு மருங்கிலும் தெரிந்த பசுமையைக் கண்டு காணாததைக் கண்ட மாதிரி மனசு ஆர்ப்பரித்தது. பசுமையை ஒட்டி ஒரு பெரிய ஆறு ஆனந்தமாக ஓடிற்று.

''எத்தனை அழகாயிருக்கு உங்க ஊர் மணி!''

வண்டியின் கைக் கம்பியைப் பிடித்தபடி அசுவாரஸ்யத்துடன் வெளியே பார்வையை ஓட்டிய மணி அவளைத் திரும்பிப் பார்த்து லேசான பரிகாசம் இழையோடச் சிரித்தான்.

''எத்தனை நேரத்துக்கு இந்த அழகை ரஸிக்க முடியும்? இன்னிக்கு இராப் போதுக்குள்ளே உனக்கு அலுத்துடப் போகுது!''

''நிச்சயமா அலுக்காது'' என்றாள் அவள் தீவிரமாக. ஓர் உத்வேகத்துடன் மரங்களையும் கிளைக்குக் கிளை தாவும் பட்சிகளையும் ஒய்யாரமாக ஓடும் நதியையும் பார்த்தாள்.

''இந்தக் காத்துக்கே ஏதோ வாசனை இருக்கு!'' என்று மூச்சை இழுத்துக் கொண்டாள். அவன் நிச்சயமில்லாமல் வெளியைப் பார்த்தான். அவளுக்கு மணியின் கவலையைக் கண்டு சிரிப்பு வந்தது. இங்கு வசதிகள் இல்லாததைப் பற்றி அவனுக்குக் கூச்சம். தன் வீட்டவர்கள் அவ்வளவு படித்தவர்கள் இல்லை என்று அவமானம். அதையெல்லாம் கண்டு கடைசியில் சுஷ்மா தன்னை நிராகரித்து விடுவாளோ என்று பயம்.

''என்னை உங்க கிராமத்து வீட்டுக்குக் கூட்டிட்டு போ மணி!'' என்று அவள் சொன்னபோது அவன் திடுக்கிட்டான்.

''எதுக்கு இப்ப? அப்பாவும் அம்மாவும் இறந்து போயாச்சு. இரண்டு அண்ணனும் அவங்க குடும்பமும் தான் இருக்கு. ஒரு விதவை அக்கா இருக்கா. யாரும் நம்ம த்கல்யாணத்துக்குத் தடங்கல் சொல்லப் போறதில்லே. கல்யாணத்துக்கு வரணும்னு ஆவலும் படமாட்டாங்க. நானே அங்கே போய் நாலு வருஷம் ஆறது.''

''எனக்குப் போகணும்னு ஆசையா இருக்கு. கல்யாணத்துக்கு முந்தி ஒரு டிரிப் போயிட்டு வரலாம்.''

அவன் பரிகாசமாகச் சிரித்தான்.

''சினிமாக் கதாநாயகி மாதிரி அவங்க கால்ல விழுந்து ஆசி வாங்கணுமாக்கும்!''

''இல்லே.... உன்னைப் பத்தி முழுசாத் தெரிஞ்சுக்கணும்.''

அவனை இந்த வார்த்தைகள் கலவரப்படுத்தியிருக்கலாம். அவளுக்கு வேறு விதமாகச் சொல்லத் தெரியவில்லை. மனசிலிருந்ததை மறைக்கத் தெரியவில்லை.

திடீரென்று ஒற்றையடிப் பாதையில் வண்டி சென்றது. பாதை சீராக இல்லாமல் கரடு முரடாக இருந்தது. ணங் என்று மண்டை பின் கட்டையில் இடித்தது.

''இதையெல்லாம் நீதான் கேட்டாய்!'' என்றான் அவன் ஆங்கிலத்தில்.

அவள் சிரித்தாள்.

''வீடு இன்னும் எவ்வளவு தூரம்?''

''நடந்தா அஞ்சு நிமிஷம்.''

''அப்ப நடக்கலாம். சாமான் வண்டியிலே வரட்டும்.''

நடப்பது ரம்யமாக இருந்தது. பச்சைப் படுதாக்கள் போல கரும் பச்சையும் இளம் பச்சையுமாக மரங்கள் நின்றன. வண்டி முன்னால் சென்றது. சட்டென்று ஒரு பெரிய கட்டடம் தென்பட்டது. தனியாக, இருநூறு வயசானது போல் ஆயாசத் தோற்றத்துடன். புராதனக் கோயில் என்று அவள் நினைத்தாள்.

''இதுதான் என் வீடு'' என்றான் அவன். அவள் திடுக்கிட்டாள்.

''ஆள் நடமாட்டமே காணும்?''

''எல்லோரும் இருப்பாங்க உள்ளாற.''

இருந்தார்கள். வண்டி சத்தம் கேட்டு திமு திமுவென்று சின்னதும் பெரிசுமாக ஒரு கூட்டம் வெளியில் வந்து நின்றது. அவனையும் அவளையும் பார்த்துக் காரணம் புரியாத மௌனத் திகைப்பில் நின்றது.

சுஷ்மா சினேகிதத்துடன் புன்னகைத்தாள். மணி சற்று முன்னால் நகர்ந்து நடுத்தர வயசாய்த் தெரிந்த ஒருத்தியைப் பார்த்து,

''என்ன அண்ணி, நல்லாருக்கீங்களா?'' என்றான்.

அண்ணி சற்று கலைந்து,

''இருக்கோம்'' என்றாள். ''இதுதான் நீ எழுதியிருந்த பெண்ணா?''

''ஆமாம், சுஷ்மா.''

கும்பல் இன்னும் அசையாமல் விறைத்துப் பார்த்தபடி நின்றது.

''என்ன அண்ணி, உள்ளே வரவா, போயிடவா!'' என்றான் மணி தன் சங்கடத்தை மறைத்தபடி. ''ஆ, வாங்க வாங்க!''

வீடு உள்ளே பெரியதாக இருந்தது. நாற்காலியோ பெஞ்சோ எதுவும் இல்லாமல் வெறிச்சோடி இருந்ததால் அறைகள் பெரிதாக இருந்தன. அதன் மையத்தில் ஜனங்கள் மட்டுமே இருப்பதைப் பார்க்கையில் பழைய அரண்மனையைப் பார்க்க வந்த டூரிஸ்ட் கும்பல் போல் சுஷ்மாவுக்குப் பிரமை தட்டிற்று. அந்தக் கும்பல் அகன்ற விழிகளுடன் அவளைத்தான் பார்த்தது.

மணி அவளுக்கு எல்லாரையும் அறிமுகப்படுத்தினான்.

''இது பெரிய அண்ணி, சின்ன அண்ணி, அக்கா கௌஸல்யா.'' பிறகு வரிசையாக அவரவர் குழந்தைகள், காமு, சோமு, கிட்டா, எதுகிரி, லக்ஷ்மி, பாரு, கோபி, துர்கா, நாணா, மீனு...

பாதி பெயர்கள் மணிக்கு நினைவிருக்கவில்லை.

அண்ணன்மார்கள் பரமசிவமும் கோதண்டமும் வயலுக்குப் போயிருந்தார்கள். கௌஸல்யாதான் தானாகப் பேசினாள். ''கிணத்

தடிக்குப் போய் கால் கழுவிட்டு வாங்க. பலகாரம் சாப்பிடலாம்'' என்றாள்.

''நாட் எ பேட் ஐடியா'' என்று மணி சுஷ்மாவைப் பார்த்துப் புன்னகைத்தான். ''பசிக்குது இல்லே?''

''ரொம்ப!''

''கிணறு இந்தப் பக்கம் இருக்கு!'' என்று ஐந்து வயது நாணா முன்னால் ஓடினான்.

இரண்டு அறைகளைக் கடந்து ஓர் இடிந்து போன வாசலைத் தாண்டி வெளி நடைக்கு வந்தபோது ஒரு பிரும்மாண்டமான திறந்த முற்றம் தென்பட்டது. நட்ட நடுவில் ஒரு கிணறு. பெரிசு. சுவர் இடிந்து போன பழசு - தன்னுள் பல ஜன்மத்து ரகசியங்களைப் பொத்தி வைத்த மாதிரி. கிணற்றைச் சுற்றிப் பிறகு கட்டப்பட்ட வட்ட வடிவமான சிமெண்டு மேடை, மேடைக்குள் ஓரமாக அடங்கின ஒரு துவைக்கும் கல். கல்லின் மேல் ஒரு வயதான அம்மாள் உட்கார்ந்திருந்தாள். தோற்றம் பயங்கரமாக இருந்தது. ஒரு பழைய கந்தல் புடவையைத் தாறுமாறாகச் சுற்றியிருந்தாள். தலை எண்ணெய் இல்லாமல் வாரப்படாமல் வெளுத்த தேங்காய் நார் போல் இருந்தது.

அவர்கள் வந்ததைக் கவனிக்காமல் எங்கேயோ பார்த்தபடி யாரையோ திட்டிக் கொண்டிருந்தாள்.

சட்டென்ற ஒரு சங்கடத்துடன் மணி நின்றான்.

''அது எங்க அப்பாவுடைய மூத்த சம்சாரம். மூளை கலங்கிப் போச்சு, அவங்களுக்கு. ரொம்ப வருஷத்துக்கு முந்தியே'' என்றான் மெல்ல.

''அது ஒரு பைத்தியம்'' என்று நாணா அறிவித்தான். பிறகு கிடுகிடுவென்று துவைக்கிற கல்லின் முன்னால் நின்று. ''ஏய்

பைத்தியம், கொஞ்சம் ஒதுங்கு. மணி சித்தப்பா வந்திருக்காங்க. அவங்க கால் கழுவணும்'' என்றான்.

பெரியம்மா மெல்லத் திரும்பினாள். கண்களில் அசாத்திய கோபம் தெரிந்தது.

''யார்றா அது பைத்தியம்? நீ பைத்தியம், உங்க அப்பன் பைத்தியம்; உங்க பாட்டி பைத்தியம்!''

உள்ளேயிருந்த கும்பல் முற்றத்துக்கு வந்திருந்தது. பத்து வயசுக்கு மேற்பட்டவர்கள் வாயைப் பொத்திக் கொண்டு சுஷ்மாவை ஒரு கண் பார்த்துச் சிரித்தார்கள். பத்து வயதுக்குக் கீழ்ப்பட்டது பெரியம்மாவின் முன்னால் நின்று குதித்தபடி ஏசிற்று.

''பைத்தியம் டோய்! பைத்தியம்!''

அடிவயிற்றில் ஒரு ஜில்லிப்பு ஏற்பட்டது. பெரியம்மா அந்தப் படைக்கு முன்னால் தன்னந்தனியாய் நின்றாள். சரமாரியாய் கோபக் கணைகள் தொடுத்தாள்.

கிடுகிடுவென்று கௌஸல்யா அக்கா முன்னால் பாய்ந்தாள். குழந்தைகளை ஓர் அதட்டல் போட்டு அடக்கி, பெரியம்மாவின் தோளைப் பற்றி,

''ஆமாம், இவங்கள்ளாம் தான் பைத்தியம், நீங்க வாங்க, ரூமுக்குப் போய் பலகாரம் சாப்பிடலாம்'' என்றாள்.

பெரியம்மா சட்டென்று அடங்கிப் போனாள். ஆனால் ஏதோ முணு முணுத்தபடியே கௌஸல்யாவுடன் நகர்ந்தாள்.

சுஷ்மாவுக்கு திகைப்பு அடங்க சற்று நேரம் ஆயிற்று.

''ஏன் அண்ணி, இவங்களை ரூமிலே வெச்சுப் பூட்டற தில்லையா?'' என்று மணி சின்ன அண்ணியைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

மணி இந்தப் பெரியம்மாவைப் பற்றித் தன்னிடம் சொன்னதே யில்லை என்கிற வியப்புடன், காமுவும் லக்ஷ்மியும் கிணற்றிலிருந்து இழுத்துக் கொடுத்த நீரில் காலையும் முகத்தையும் கழுவிக் கொண்டாள். பெரியம்மாவை உடனடியாக அவர்கள் மறந்து போனார்கள். மணி கும்பலோடு கலந்திருந்தான்.

சமையற்கட்டை ஒட்டினாற்போல் இருந்த நடையில் இரண்டு மணை போட்டு அதன் முன்னால் வாழை இலை ஏடுகள் இருந்தன. ஓரமாகத் துளி சர்க்கரை. மையத்தில் தும்பைப் பூ நிறத்தில் இட்டிலி. அதன் மேல் தாராளமாய் தேங்காய் சட்டினி. சமையற்கட்டின் புகை மூட்டத்திலிருந்து வெளிப்படும் தேவதையாய் வெள்ளைப் புடவையில் கௌஸல்யா தும்பைப் பூக்களை மேலே மேலே போட, போதும் போதும் போதும் என்று சுஷ்மா மன்றாட, கும்பல் விழுந்து விழுந்து சிரிக்க - பெரியம்மா எந்த மூலையிலோ இருந்தாள்.

மாலை மங்கும் நேரத்தில் பரமசிவமும் கோதண்டமும் வந்தார்கள். அறிமுகப்படுத்தலுக்குப் பின், தங்கள் சம்பாஷணையில் சுஷ்மாவைக் கலந்து கொள்ள அழைக்காமல் மணி அவர்களுடன் முன் கட்டில் ஒதுங்கிக் கொண்டான்.

''உங்களைச் சித்தின்னு கூப்பிடலாமா?'' என்றாள் லக்ஷ்மி.

இனம் புரியாத கூச்சத்துடன்,

''வேண்டாம், சுஷ்மான்னு கூப்பிடு, பேரைச் சொல்லத் தயக்கமா இருந்தா அக்கான்னு கூப்பிடுங்களேன்!'' என்றாள் சுஷ்மா.

''நீங்க சித்தப்பாவைக் கல்யாணம் செய்துக்கப் போறதா அம்மா சொன்னாங்க.''

''கல்யாணமான பிறகு உறவு சொல்லிக் கூப்பிட்டுக்கலாம்.''

''அப்ப சரி.''

''கொஞ்சம் நடந்துட்டு வந்தா என்ன?''

''ஐய்ய, விளக்கு வெச்சாச்சு. வெளியிலே போக விடமாட்டாங்க. போறது கூட ஆபத்துதான் இங்கே.''

நடு முற்றத்தை ஒட்டி ஓடிய நடையில் அவளும் மற்ற இளைய பெண்களும் உட்கார்ந்திருந்தார்கள். அண்ணிகளும் கௌஸல்யாவும் இரவு சமையலுக்கான ஆயத்தத்தில் இருந்தார்கள். ஒரே லாந்தர் விளக்கு வெளிச்சத்தில் உட்கார்ந்திருந்த எல்லோர் நிழல்களும் சுவரில் படர்ந்து கூரையைத் தொட்டன.

''பெரியம்மா எங்கே?''

''யாரது பெரியம்மா?''

''அதாண்டி, பெரிய பாட்டியைச் சொல்றாங்க. அது இப்பத் தூங்கிட்டுக் கிடக்கும். ராத்திரி பன்னிரண்டு மணிக்கு, ஊர் அடங்கின பிறகு தூக்கம் கலைஞ்சிடும்.''

''நல்ல வேளை, அக்கம்பக்கத்திலே வீடுகள் இல்லே'' என்று காமு சிரித்தாள்.

''எத்தனை நாளா அவங்களுக்குப் புத்தி சரியில்லே?''

''ஓ! எவ்வளவோ காலமா! அப்பாவுக்கெல்லாம் கல்யாணம் ஆறதுக்கு முந்தின்னு சொல்வாங்க.''

''வைத்தியம் ஒண்ணும் பாக்கல்லியா?''

''வைத்தியமா?'' என்று எதுகிரி கேட்க மற்றவர்கள் பக்கென்று சிரித்தார்கள்.

''பைத்தியத்துக்கு வைத்தியம் பார்ப்பாங்களா என்ன?''

வியப்பாக இருந்தது.

''ஏன் பார்க்காம? அதுவும் ஒரு வியாதிதானே?''

''இங்கெல்லாம் காய்ச்சல் அடிச்சாத்தான் வைத்தியம் பார்க்கிறது. மூளைதான் கோளாறே தவிர பாட்டிக்கு உடம்பு நல்ல கெட்டி. நல்லா சாப்பிடுவாங்க. தூங்குவாங்க. யார் யாரையோ திட்டிட்டுக் கிடப்பாங்க. வேற ஒண்ணும் தொந்திரவு இல்லே.''

''அநேகமா ஏற்கனவே இறந்து போனவங்களைத் தான் உன்னைக் குத்திப்பிடுவேன்னு, கொன்னுடுவேன்னு சத்தம் போடுவாங்க.''

மறுபடி பக்கென்ற சிரிப்பு.

''யாரை?''

பெரிய சிரிப்புடன் காமு சொன்னாள். ''அவங்க புருஷனை!''

அவளுடைய தலை குனிந்த மௌனத்தில் எல்லாருடைய சிரிப்பும் மெல்ல அடங்கிற்று.

''அவங்களுக்குக் குழந்தைங்க கிடையாது?''

''கௌஸல்யா அத்தை அவங்க மகதான்.''

அடிவயிற்றில் மறுபடி ஒரு ஜில்லிப்பு ஓடிற்று. அண்ணிகள் இருவரும் வந்து சேர்ந்து கொண்டார்கள்.

''என்ன பேசறீங்க? எங்களுக்கெல்லாம் பேச சமாச்சாரமே கிடையாது. வீட்டை விட்டுப் போறதில்லே. அக்கம் பக்கத்திலே வீடும் இல்லே.''

''ஏன் இல்லே?''

ரொம்பக் கேள்வி கேட்கிறோமோ என்று மெல்லிய கூச்சம் ஏற்பட்டது.

''இந்த வீடு எந்தக் காலத்திலேயோ இவங்க முப்பாட்டனுக்கு மான்யமா கிடைச்சது. ராஜாக்கள் இந்தப் பக்கம் வேட்டையாட வரும்போது இங்க தங்குவாங்களாம். அதனாலே ஜனங்க மத்தியிலே இதைக் கட்டல்லேன்னு நினைக்கிறோம். அக்கம் பக்கத்திலே யாருமில்லேன்னாலும் டவுன் பஸ் இந்த வழியாத்தான் போகுது. ஒண்ணும் தொந்திரவில்லே.''

இவர்கள் என்றைக்காவது டவுன் பஸ்ஸில் ஏறியிருக்கிறார்களா என்று சந்தேகமாயிருந்தது.

''சந்தைக்குப் போவம், மாசத்துக்கு ஒரு தடவை சினிமாப் பார்க்கப் போவம்.''

''கௌசல்யா அக்கா எங்கே காணும்?''

''அவங்க சமையல் கட்டிலேயேதான் குந்தியிருப்பாங்க. அப்படியே பழக்கம்.''

''அவங்க புருஷன் போயி எத்தனை வருஷமாச்சு?''

''எங்களுக்கெல்லாம் கல்யாணமாறதுக்கு முந்தியே. கல்யாண மாயி ரெண்டு மாசத்துக்கெல்லாம் புருஷன் போயிட்டாரு. இவங்க புருஷன் வீட்டுக்கே போயிருக்கல்லே; சமைஞ்சிருக்க லயாம்.''

ஐய்யோ பாவமே!

''வயசான ஒருத்தருக்கு மூணாந்தாரமா கொடுத்திருக்காங்க.''

விழிகள் பிதுங்கின.

''ஏன்?''

''அந்தக் காலத்திலே அப்படித்தானே! பெண்ணுக்கு எப்படியோ கல்யாணத்தைச் செஞ்சுடணும்னு பறப்பாங்க. அந்த ஆளுக்குச் சொத்தும் இருந்தது போல.''

''என்ன பிரயோஜனம், வாழவேயில்லையே!''

சமையலறைப் புகைமூட்டத்திலிருந்து தும்பைப் பூக்களை ஏந்தி வரும் தேவதையாய்-

''என்னவோ கொடுப்பினைதான். தலையெழுத்தை யாராலே மாத்த முடியும்?''

சாப்பாட்டு வேளை. ஆண்களும் சிறுவர்களும் முதலில் சாப்பிட்டார்கள். பிறகு பெண்கள் வட்டமான வாழை ஏடுகளின் முன்பு. வருந்தி வருந்திப் பரிமாறும் கௌஸல்யா அக்காளின் அருள் சுரக்கும் முகம். எப்படி இப்படி இருக்கிறது இந்த முகம்? எதையும் அனுபவிக்காமலே கரை கண்ட முகமாய்?

இந்த வீட்டு நியமத்துக்குக் கட்டுப்பட்டவனாய் மணி நடந்து கொண்டான். அண்ணன்களோடு சங்கமித்துப் போனான். வீட்டுப் பெண்களுக்கு அவளிடம் கேட்க வேண்டிய விஷயங்கள் நிறையவே இருந்தன. அவளது பிறப்பு, வளர்ப்பு, படிப்பு, எண்ணங்கள், பட்டண வாழ்க்கை - ஏன் இத்தனை சொற்பமாக நகை அணிந்திருக்கிறாள்? நகை செய்துகொள்ள வசதி இல்லையா! விருப்பமில்லையா? வீட்டில் பெரியவர்கள் ஒன்றும் சொல்லமாட்டார்களா?

இவர்களுடன் பேசுவதே அவளுக்கு நூதன அனுபவமாக இருந்தது. இங்கு குழாயும் வாஷ்பேஸினும் லெட்ரினும் இல்லாதது கூட ஓர் அனுபவம்!

இரவு மற்ற பெண்களுடன் கட்டாந்தரையில் பாயையும் தலையணையும் வைத்துப் படுத்துக் கொண்டாள். அடுக்களை வேலையெல்லாம் முடிந்து கௌஸல்யா அக்கா வந்து படுப்பதற்குப் பதினோரு மணி ஆகிவிட்டதை அவள் கவனித்தாள்.

வெளியில் இருக்கும் பச்சைப் படுதாக்களை, பறக்கும் பட்சி களை ஓடும் நதியை இவள் பார்த்திருப்பாளோ? என்றாவது?

எல்லாருக்கும் நிச்சிந்தையான தூக்கம். இந்தத் தூக்கமே எதிர்பார்ப்பில்லாத சரள இயக்கம். மயானத்தில் ஒரு கால் வைத்திருப்பவனுக்கு மூன்றாம் தாரமாக சமைவதற்கு முன்பே வாழ்க்கைப்பட்டாலும் எதிர்க்கத் தெரியாத இயக்கம். அனுபவிக் காமலே நழுவிப்போன வாழ்க்கையையும் புன்னகையுடன் ஏற்கும் சரளம். எப்படி? இவர்களுக்கு ஏக்கங்கள் கிடையாதா? வருத்தம் உண்டா? வடிகால்கள் உண்டா?

தூக்கம் அவளை மெல்ல மெல்ல ஆட்கொண்டது. கனவுகள் கூட விரிந்தன. அவள் துவைக்கிற கல்லில் உட்கார்ந்திருக்கிறாள், அவளைச் சுற்றி காமு, சோமு, கோபு, லக்ஷ்மி, எதுகிரி, நாணா -

பைத்தியம் டோய் பைத்தியம்!

நா பைத்தியமில்லே. நீதான் பைத்தியம். உங்கப்பன், உங்க தாத்தா பைத்தியம்!

சரேலென்று அவள் விழித்துக் கொண்டாள். மிகப் பெரிய குரலில் யாரோ கத்தினார்கள்.

''உன் மென்னியைத் திருகி அந்த நதியிலே எறிவேன்! எத்தனைத் திமிர் உனக்கு! இப்படிச் செய்ய எப்படித் துணிஞ்சே?''

அடி வயிற்றைக் கலக்கிற்று. யாரையாவது எழுப்பலாமா? எல்லாரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். கௌஸல்யா அக்கா உள்பட.

அவள் மெல்ல எழுந்தாள். குரல் வரும் திசையை நோக்கி உத்தேசமாக நடந்தாள். திறந்த உள் முற்றத்தை அடைந்தபோது குரல் துல்லியமாக மேலேயிருந்து ஒலித்தது. அவள் அண்ணாந்து

பார்த்தாள். மங்கிய நிலா வெளிச்சத்தில் நிழல் உருவமாய் கூரை உச்சியில் பெரியம்மா நின்றிருந்தாள். எப்படி ஏறினாள்?

''எலேய், நா என்னடா தப்பு செஞ்சேன்? உனக்கொரு குழந்தையைப் பெத்துக் குடுக்கல்லே? உன் வீட்டைக் கவனிக்கல்லே? நீ சொன்னபடியெல்லாம் கேட்கல்லே? இன்னொரு கல்யாணம் எதுக்குடா உனக்கு? திமிருதானே? என்னை சமையல்காரியா ஒதுக்கி வெச்சிருக்கே. திமிருதானே? உன் கழுத்தை நெறிச்சு அந்த நதியிலே போடுவேண்டா! நீ நாசமாப் போவே! அந்தச் சிறுக்கி நாசமாப் போக!''

நெஞ்சு விக்கித்து நின்றது. எத்தனை ஆத்திரம்! எத்தனை ஆங்காரம்! காய்ந்த சருகு போல் இரவின் மோனக்காற்றில் உருவம் ஆடிற்று. திடீரென்று பெரியம்மா தலையில் தலையில் அடித்துக் கொண்டாள். ஒப்பாரி போல் ஏதோ சொல்லி அழுதாள்.

சுஷ்மா காதைத் தீட்டிக் கொண்டு இருளில் நின்றாள். ஒன்றும் விளங்கவில்லை. பெரியம்மாவின் அருகில் இப்பொழுது கௌஸல்யா அக்கா வந்து நின்றாள். எப்படிப் போனாள்? எங்கே யாவது படிக்கட்டு இருக்கவேண்டும். பெரியம்மாவை அணைத்துக் கொண்டு கௌஸல்யா விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள். பெரியம்மா தன் ஒப்பாரியை நிறுத்தி, அவள் முதுகைத் தட்டி சமாதானப் படுத்தினாள். பிறகு வெட்டவெளியைப் பார்த்துக் கத்தினாள்.

''உங்கப்பன் ஒரு மனுஷனா? பன்னண்டு வயசுக் குழந்தையை அறுபது வயசுக்காரனுக்குக் கட்டிக் கொடுக்கணும்னா அவன் மனுஷனில்லே. அயோக்கியன்! சுட்டுப் பொசுக்கணும் அவனை! பதிமூணு வயசிலே இந்த வீட்டு சமையல்காரியா போனியேடி! எனக்குத் தாங்கல்லியேடியம்மா, எனக்குத் தாங்கல்லியே!''

கௌஸல்யா பேசவேயில்லை. அழும் ஒலி மட்டும் கேட்டது.

முற்றத்துக்கு யாரோ விரு விருவென்று வந்தார்கள். அவள் இருளில் தன்னை மறைத்துக் கொண்டாள்.

மணி, உச்சியைப் பார்த்துப் பெரிய குரலில் கத்தினான். ''அக்கா! இது என்ன கலாட்டா நடு ராத்திரியிலே!''

விருக்கென்று கௌஸல்யா எழுந்தாள். பெரியம்மாவை அணைத்தபடி ஏதோ மெதுவாகச் சொன்னாள். சிறிது தயக்கத்திற்குப் பிறகு இருவரும் நகர்ந்து பார்வையிலிருந்து மறைந்தார்கள், மணி நின்ற இடத்திலேயே நின்றான்.

சற்று நேரத்தில் முற்றத்துக்குள் இறங்கிய ஒரு படிக்கட்டின் வழியாகப் பெரியம்மாவைப் பிடித்து நகர்த்தியபடி கௌஸல்யா வந்தாள்.

மணி ஆத்திரத்துடன் சற்று அடங்கிய குரலில் சொன்னான்.

''இந்தப் பைத்தியத்தைப் பூட்டி வையுங்கன்னு நா சொல்லல்லே? ரா வேளையிலே இப்படிக் கூரை மேலே நின்னு கத்திக்கிட்டு - என்ன அசிங்கம் இது! நா நாலு நாளைக்காக இந்த ஊருக்கு வரேன், மனுஷனை நிம்மதியா இருக்க விடமாட்டிங்க?''

கௌஸல்யா பதிலே சொல்லாமல் இப்பொழுது ஆச்சரியமாக அடங்கிப் போயிருந்த பெரியம்மாவை அழைத்துக் கொண்டு நகர்ந்தாள்.

''என்னடா மணி?'' என்றபடி பரமசிவம் வந்தார்.

''என்ன அண்ணா இது? பெரியம்மாவைப் பூட்டி வெக்கணும். இல்லேன்னா பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே சேர்க்கணும். இப்படி வீட்டுக்குள்ளேயே வெச்சிக்கிட்டு இந்தக் கத்தலைக் கேட்டுக்கிட்டு எப்படி இருக்கீங்க?''

''எங்களுக்குப் பழகிப் போச்சு. பைத்தியக்கார ஆஸ்பத்திரி எங்கேயோ இருக்கு. அதுக்கெல்லாம் அனுப்ப வசதியில்லே. அக்காவுக்கும் இஷ்டமில்லே.''

''கொஞ்ச நாள்லே அக்காவும் அப்படித்தான் ஆகப் போறாங்க. பார்த்துக்கிட்டே இருங்க. பெரியம்மா இரத்தம்தானே ஓடுது?''

இருவரின் குரல்களும் மெல்லத் தேய்ந்து ஓய்ந்ததும் அவள் மூச்சைப் பிடித்தபடி தன் இடத்திற்குச் சென்று படுத்தாள். கௌஸல்யாவைக் காணோம். அவள் அழுத அழுகை வெகு நேரத்துக்கு நினைவில் நின்றது. அருள் சுரக்கும் முகம். அதில் கண்ணீர் வழிந்தால் எப்படியிருக்கும்? அம்பிகையின் கண்ணீர் போல, கண்ணீர் வற்றும் போது அம்பிகைகளின் உருவம் மாறும். வெள்ளைத் தேங்காய் நார் தலையாய், காய்ந்த சருகாய், அருள் சுரக்கும் கண்கள் அக்னிக் கேணிகளாய் - தூக்கம் வராமல் புரண்டு புரண்டு புரண்டு உருளுகையில் - ஆ, இன்று கிடைத்த அதிர்ச்சி வேறு என்கிற பிரக்ஞையில், நெஞ்சு குலுங்கிற்று.

''இந்தப் பைத்தியத்தைப் பூட்டி வையுங்கன்னு சொல்லல்லே? என்ன கத்தல் இது? என்ன அசிங்கம் இது!''

இருட்டாக இருந்ததால் நல்ல வேளையாக மணியின் முகபாவம் தெரியவில்லை. அந்த அசிங்கத்தை அவளால் ஜீரணித்திருக்க முடியாது.

''அக்காவும் அப்படித்தான் ஆகப் போறாங்க. பெரியம்மா இரத்தம்தானே ஓடுது?''

நீ படித்தவன்! மனிதாபிமானம் என்பது உன் இரத்தத்திலே ஓடுதா? பெரியம்மாவின் கணிப்பு சரி. நீ பைத்தியம், உன் அப்பன் பைத்தியம். ஆதிக்கத் திமிரினால் ஏற்பட்ட பித்து. ஜன்ம ஜன்மமாய்த் தொடரும் பாரம்பர்ய சொத்து!

இரயிலில் பட்டணத்தை நோக்கிச் செல்லும்போது அவன் பிரேமையுடன் சொன்னான்:

''அண்ணன்களுக்கு உன்னை ரொம்பப் பிடிச்சுப் போச்சு. கல்யாணத் தேதியை முன் கூட்டித் தெரிவிச்சா கண்டிப்பா வர்றதாச் சொன்னாங்க.''

அவள் கை நகங்களை ஆராய்ந்தாள். ''எனக்குக் கல்யாணம் செய்துக்கற எண்ணம் இப்ப இல்லே மணி!'' என்றாள் மெல்ல. அவனுடைய தாடை விழுந்தது.

''அப்படின்னா?''

''நா உன்னைக் கல்யாணம் செய்துக்க முடியாது மணி!''

''ஏன்?'' அவன் பதற்றத்துடன் வெடித்தான். ''பெரியம்மாவைப் பாத்து பயந்து போனியா? பரம்பரை வியாதியாயிருக்கும்னு நினைக்கிறியா? அவங்களுக்கும் எனக்கும் இரத்த சம்பந்தமே கிடையாது....''

அவள் சோர்வான புன்னகையுடன் தலையசைத்தாள்.

''இதெல்லாம் காரணமே இல்லே....''

''பின்னே?'' என்றான் அவன் திகைப்புடன். ''நா அப்பவே சொன்னேன், கிராமத்துக்குப் போக வேண்டாம்னு. வசதி கிடையாது, அவங்கள்லாம் நாகரிகமானவங்க இல்லே... உனக்கு அதிர்ச்சி யாயிருக்கும்னு.''

அவள் சிரித்தாள். ''எனக்கு அங்கே எல்லோரையும் ரொம்பப் பிடிச்சுது மணி. வாழ்க்கை வசதியெல்லாம் அவ்வளவு முக்கியமில்லே.''

''பின்னே?'' என்றான் அவன் அதிர்ச்சியுடன். ''அங்கே போனதுக்கப்புறம் தானே இந்த முடிவுக்கு வந்திருக்கே? நா உன்னை அழைச்சிட்டுப் போனது தப்பு. கல்யாணத்துக்குப் பிறகு நாம கிராமத்தோட தொடர்பே வெச்சுக்க வேணாம்.''

''இல்லே மணி, மன்னிச்சுக்க. நா மறுக்கிறதுக்கு நீ நினைக்கிற காரணங்களே இல்லே.''

''பின்னே என்ன காரணம்?''

இவனுக்கு இதையெல்லாம் விளக்குவது அனாவசியம் என்கிற ஆயாசத்துடன், ''ப்ளீஸ் மணி, என்னைக் கேட்காதே. எனக்கு விளக்கத் தெரியாது!'' என்றாள்.

அமுதசுரபி 1986

